உ

குகமயம்

மயிலம்

# திருக்கோயில் - திருமட வரலாறு

மடம் - தேவஸ்தான - வெளியீடு

1—12—1940




ஆக்கியோன் :

வெண்பாவூர் - சி. துரைசாமி

ஸ்ரீ சிவஞான பாலயதேசிகன் திருவடி வாழ்க

7914

உ

குகமயம்

# முன்னுரை

செந்தமிழ் நாட்டில், முடியுடை வேந்தர், குறுநில மன்னர், வள்ளல் முதலிய பெருமக்கட்குப் பின், தமிழ் மொழியையும் தேவாலயத்தையும் சமயத்தையும் வளர்த்த பெருமை மடங்களுக்கே யுரியனவாகும். மடங்களில் தளர்ந்துழி யுதவு இன்ற கல்வியே போன்று, ஆன்மாக்கள் மறைப்புச் சத்தியினின்று நீங்கி இறைவனடி யடைதலாகிய வீடுபேற்றிற்குரிய மார்க்கங்களை உபதேசித்து வருகிற ஐந்தடக்கிய அறிஞர்கள் குருமார்களாக வீற்றிருந்தார்கள். காலம் செல்லச் செல்ல குருமார்களிற் சிலர் எண்ணம் மாறுபடுவதாயிற்று. "வருணமொன்ருய் மயங்கிய வூழி" என்று ஆன்ருேர் கூறியபடி இக்கலியுள் ஆலயங்கள் நன்கு பாதுகாக்கப்படாமலும், மடங்களின் செல்வங்கள் பயனற்ற வழியிற் செலவழிக்கப்பட்டும் வரலாயின. இதனை அரசாங்கத்தார் உணர்ந்து இந்துமத அறநிலை பாதுகாப்புக் கழகம் என்ற குழுவினரைக் கொண்டு சமயத்தைப் பாதுகாக்கலாயினர். ஆனுல், இந்தக் கழகத்தார் சமயப் பற்றும் தெய்வ பக்தியும் உடையவர்களாக இருந்தாலொழிய அரசாங்கத்தார் கொண்ட எண்ணம் நன்மை யடையா தன்ருே ?

அறநிலைப் பாதுகாப்புக் கழகத்தார், தற்காலத்தில் மடங்கள் - ஆலயங்களின் வரலாறுகள், படித்த ஒரு சிலர்க்கன்றி ஏனையோர் அறிவது 'யாமை மயிர்க் கம்பலமாகி' விட்டன என்பதையுணர்ந்து ஒவ்வொரு ஆலயங்கள், மடங்கள்

முதலியவற்றின் வரலாறுகளைச் சுருங்கிய முறையில் வசனமாக எழுதி வெளியிடவேண்டும் என அறிக்கை விடுத்தனர். இவ்வறிக்கையை நம் நாட்டு மக்கள் பொன்னேபோற் போற்றுவர் என்பதற்கைய முண்டோ.

நிற்க, இம்மயிலம் தெய்வத்தான ஆதீனபரம்பரை தர்ம கர்த்தரும் பொம்மயபாளையம் மடத்தின் தலைவர்களுமாகிய ஸ்ரீமத் சிவஞான பாலயசுவாமிகளாகத் தற்போது பதினெட்டாம் பட்டத்தில் எழுந்தருளி இருக்கும் சுவாமிகள், தலபுராணம் செய்யுளாக இருத்தல்கண்டு வசனமுறையில் வழங்குதற் பொருட்டு இம்மடம் - தலவரலாறுகளை எழுதுமாறு பணித்தார்கள். இம்மடம், இத்தலம் ஆகிய இரண்டும் பிரிவிலொட்டாகிய வினைத்தொகை பண்புத்தொகை போல, பிரித்தெழுத முடியாதபடி இருந்தமையின், இரண்டையும் சேர்த்து மயிலம் திருக்கோயில் - திருமட வரலாறு என்னும் தலைப்பினொடு எழுதலானேன். இவ்வரலாற்றிற் கூறுபவை எல்லாம் பெரியோர்கள் கூறினவையே யன்றி என்னுடைய மனத்தில் தோன்றினவை யல்ல. இதனை எழுதுதற்குத் துணையாக இருந்த நூல்கள் : மயிலம் தலபுராணம், சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, மயிலம் பிள்ளைத்தமிழ், பாசவதைப் பரணி, புலவர் புராணம், மயிலாசலக் கலம்பகம், திருவலங்கல் திரட்டு, சிவப்பிரகாச சுவாமிகள் சீவிய சரித்திரமூலம், சிதம்பர சுவாமிகள் சரித்திரம், வீர சைவப் பத்திரிகைகள், சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் எழுதிய சிவப்பிரகாச சுவாமிகள் வரலாறு, மடத்திலுள்ள சில குறிப்புகள் முதலியனவாகும்.

நான் வசனநூல் எழுத நேர்ந்தது இதுவே முதன் முறையாகும். குற்றங்கள் பல விருத்தல் கூடும். இதிலுள்ள

குற்றங்களையும் வரலாற்றில் விட்டுப்போன பகுதிகளையும் அன்பர்கள் எனக்கு அறிவிப்பார்களேயானல் அதனை அடுத்த பதிப்பில் திருத்தி வெளியிடுவேன். எழுதிய இதனைப் பிழை ஆராய்ந்து திருத்திய எனது நண்பர்கள் வித்வான். திரு. அடிகளாசிரியர் அவர்களுக்கும், வித்வான். திரு. சண்முக முதலியார் அவர்களுக்கும், எழுதுவதற் குதவிபுரிந்த மாணவர் கருணைச் சிவப்பிரகாசத்திற்கும் எனது நன்றி உரித்தாகுக. என்னை இச்செயலில் ஊக்குவித்து உடனிருந்து உதவிய முருகப் பெருமானை இருதய கமலத்துள் இருத்தி, 18-வது குருமூர்த்தியாக விளங்கும் ஸ்ரீமத் ஞான இராஜ தானியான இனும் பொம்மய பாளையம் பெரியமடம் சிவ கஞ்சி மயூராசல, நிவாச, யதீஸ்வர கர்த்தரான, மயிலம் தேவஸ்தான ஆதீனபரம்பரை தர்மகர்த்தத்துவம் இனும்தார் ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகளுக்கு இதனை உரிமையாக்கு கின்றேன்.

இங்ஙனம்

வேண்பாவூர் - சி. துரைசாமி

தமிழாசிரியன்

ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள் கல்லூரி

மயிலம்.

---



மயிலம் திருக்கோயிலும் திருமடமும்

உ

குகமயம்

ஸ்ரீ சிவஞான பாலயதேசிகன் திருவடி வாழ்க

## மயிலம்

# திருக்கோயில் - திருமட வரலாறு

### கணபதி

பூவி ளுதனன் பூவளந் தோனுமா
தேவி ளுதனற் றேவர் முனிவரர்
மேவி ளுதம் விரும்புங் கரிமுகத்
தேவி ளுதச் சிலம்படி யேத்துவாம்.

### சுப்பிரமணியர்

பவமாதித் துயரகற்றி யடைந்தவர்க்கின்
பருண்மயிலைப் பருப்ப தத்தி
னவமாநற் குறக்கொடியைத் தெய்வானைப்
பிடியைமண நயந்து தூய
தவமாமெய்க் கொண்டிலகும் பாலசித்தற்
குயரருளைத் தந்தன் னோர்க்குச்
சிவஞான தேவனெனப் பெயரருள்சண்
முகத்தேவன் றிருத்தாள் சேர்வாம்.

—மயூராசல புராணம்

### சிவஞான பாலய சுவாமிகள்

இளைக்கு மிடியற் குறுபொருளா
மிறைவர்க் கரசர்ங் கூற்றுவனை
விளிக்கும் பிணிக்கு மருந்தாகும்
விடத்திற் கருஞ்சீர்க் கலுழனும்

வளைக்கும் பகைக்குப் படையாகு
மலடர்க் கரிய மகவாகுந்
திளைக்குங் கருணைச் சிவஞான
தேவன் திருக்கைத் திருநீறே.

—சி. கலம்பகம்

"அருவமும் உருவு மாகி அனுதியாய்ப் பலவாய் ஒன்ருய்ப், பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக், கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண் டுங் கொண்டே" உதித்தருளிய திருமுருகப் பெருமான் கோயில்கொண் டெழுந்தருளியுள்ள தலங்கள் பலவற் றுள் தொண்டை நாட்டின்கண் உயர்வுபெற்று விளங்கு வது மயிலம் என்னும் திருத்தலமாகும்.

முருகப் பெருமானோடு போர்செய்த சூரபதுமன் இறுதியில் மெய்யறிவு விளங்கப் பெற்றவனாய் முருகப் பெருமானைப் பலவாறு வணங்கி வாழ்த்தி, அப்பெரு மான் ஊர்ந்துவந்த மயிலுருவத்தோடு அவர்க்குத் தானூர்தியாக இருக்கவேண்டி விரும்பிக்கேட்க, முருகப் பெருமான் கருணைகூர்ந்து வராக நதிக்கு வடகரையி லுள்ள புண்ணிய நிலத்தில் மயில் வடிவங்கொண்ட மலைவடிவமாக நின்று தவஞ் செய்வாயானால் உன் விருப்பமினிது முடிவுறுமென அருள்செய்தனர். அவ் வாறே சூரபதுமன் மயில்போன்ற மலைவடிவங்கொண்டு தவஞ்செய்ய, தவத்திற்கிரங்கி முருகன் காட்சியளித்து வேண்டியன யாவை? என, சூரன், வாஹனமாகத் தேவ ரீரை யான் சுமக்கவேண்டும்; இம்மலைமீது தேவரீர் கோயில் கொண்டு அடியார்களுக்கு அருள்பாலிக்க வேண்டுமெனக் கேட்டனன். முருகன் மகிழ்ந்து முன் வர மிப்போதே பெறுக. பின் வரம் சின்னாட்குப் பிறகு பாலசித்தர்க் கருளும்போது நிகழ்வுறுமென அருளினூர்.

சூரபதுமன் மயிலுருவத்தோடு தவம் செய்தமையின் மயிலம் - மயூராசலம் என இப்பதி வழங்குவதாயிற்று.

உலக மாதாவாகிய உமாதேவியார் நீர்விளையாடலை விரும்பி ஒரு குளிர்ந்தசோலையும் தடாகமும் உண்டாக்கிக் கணத்தலைவர்களில் ஒருவரும் மேற்குவாயிற் காவலருமான சங்குகன்னப்பெருமானுக்குத் தாம்ஆடும்சோலைக்குள் யாவரையும் விடாதொழிக எனக் கட்டளையிட்டு, வாணி இலக்குமி முதலிய மகளிரோடு நீராடுவாராயினர். அவ்வமயம் இறைவனுண்டடைந்து சோலையின் வனப்பைக் கண்ணுற்று உட்செல்வான் புகுந்தனர். ஆண்டிருந்த சங்குகன்னர் இறைவனைக் கண்டு அஞ்சி மருது நின்றனர். உட்சென்ற பெருமானை நீராடும் உமாதேவியார் கண்டு நாணி உடனுறை மகளிரோடு ஒரு பக்கல் மறைந்தனர்.

இறைவன் மீண்டு சங்குகன்னரை நோக்கி " நீர் இறைவி நீராடுவதை அறிவியாததனுல் பூமியின்கண் மனிதப்பிறப்பை அடைக" எனச் சபித்தனர்.

அது கேட்ட சங்குகன்னர் மனங்கலங்கினவராய்ப் பலவாறு வாழ்த்தி இச்சாபம் நீங்கும் நாள் என்றேவெனக் குறையிரந்து வேண்டினர். அருட்கடலாகிய பெருமான் கருணைகூர்ந்து "கணத்தலைவ! நீ பூமியின்கண் அவதரித்து வேதசிவாகமங்களை விளக்கிச் சைவ சமயத்தை நன்கு வளரச்செய்தும் பலசித்தர்கட்கு அருள்புரிந்தும் இருக்குங்கால் நமது குமாரனுகிய முருகப்பெருமானேடு யுத்தம் செய்ய நேரிடும்; அவ்வமயம் இச்சாபம் நீங்கப் பெற்று நம் உருவம் அடையப்பெறுதி" என அருளிச் செய்தனர்.

கண்ணுதற்பெருமான் கட்டளைப்படியே சங்குகன்னர் கயிலைமால் வரையினின்றும் கனிவொடு நீங்கி



மயிலம் திருக்கோயில்

யோனிவாய்ப்பட்டுப் பிறவாது மயிலத்துக்குக் கீழ்த் திசையிலுள்ள கடலின்கண் சிவந்த சடைமுடி, கவச குண்டலங்கள், விபூதி, உருத்திராக்கம், இட்டலிங்கம், விபூதிப் பொக்கணம், மாத்திரைக்கோல், கீளுடை முதலியன விளங்கப்பெற்றவராகவும் பத்தாண்டென மதிக்கும் பால வயதுடையவராகவும், ஞான சூரியனைப் போன்று தோன்றி அருளினர்.

தோன்றிய அவர் உணவின்றி அக்கரையில் சஞ்ச ரித்து அவண் போந்த பலசித்தர்களுக்கு ஆகமங்களை உபதேசித்துக் கொண்டிருந்ததுமன்றிப் பல மந்திரங் களையும், மந்திரங்களின் தத்துவங்களையும் உபதேசித் துக்கொண்டிருந்தார்.

அப்பெருமான் பாலப்பருவத்தோடு பரவையின் கண்தோன்றிப் பலரும் பரவப் பலசித்துகளைச் செய்து இருந்தமையின் பாலசித்தரென்று பலராலும் அழைக்கப் பெற்றார்.

பன்னாட்களின் பின்பு பாலசித்தர் தவஞ்செய்வான் விரும்பிப் பெருமுக்கல் முதலிய பலதலங்களை யடைந்து ஆண்டுள்ள சித்தர்க்கருள்செய்து, மீண்டும் தமதாசிரமம் வருங்கால் இடையில் நாரத முனிவரைக் கண்டனர். நார தரும் பாலசித்தரின் உட்கோளை யறிந்தவராய், அவ ரைப் பார்த்து “ சூரன் முருகனையடைய விரும்பி மயில் வடிவுடைய மலையாகவிருந்து தவம்செய்து அருள் பெற்ற வரலாற்றைக் ” கூறி, மயிலமலைக்குச்சென்று தவ மியற்றல் நலமாகுமென அருளினர்.

பாலசித்தர் நாரதரருளியபடி மயிலமலைக்குச் சென்று தனக்குநேரிட்ட சிவசாபமானது நீங்கும் பொருட்டு இரவும் பகலு மிடைவிடாது முப்பத்தைந் தாண்டுகள் உணவின்றி முருகப் பெருமானை உள்ளச்

சிறையிலடைத்துத் தியானபாவனையால் பூசித்துவந்தார். முருகப் பெருமான் காலந்தாழ்க்க, சித்தர் சிந்தைகலங்கி வள்ளி தெய்வநாயகியர்களாகிய இரு சத்தியர்களையும் எண்ணித் தவஞ்செய்வாராயினர். அம்பிகையரிருவரும் பாலசித்தர் தவத்துக்கிரங்கி முருகப்பெருமானிடம் பால சித்தருக்குக் காட்சி கொடுக்கும்படி வேண்டினர். முருகப்பெருமான் ; பாலசித்தர் சிவஅபராதி யாதலின் இவ்வமயம் காட்சி கொடுப்பதற்கில்லையென மறுத்து மொழிந்தனர்.

பின்பு அம்பிகையரிருவரும் முருகப்பெருமானை ஆதரிக்காது சித்தகன்னிகைமாராக வடிவங் கொண்டு பாலசித்தருக்கு முன்தோன்றியருளினார்கள். பாலசித்தர் தோன்றிய இருவரையும் ஞானக்கண்ணாலுங்கண்டு இவர்கள் எம்மை ஆட்கொள்ளவந்த அம்மையாராகு மென உணர்ந்து மனமுருகிப் பலவாறு தோத்தரித்து ஆஸனத்தில் அமர்த்திப் பூஜித்தார்.

அம்மையாரிருவரும் ஆண்டு தேவதச்சனாலொரு மாளிகையமைவிக்கப் பெற்று அதனுள் பாலசித்தர் பாதுகாத்து வாராநிற்ப வதிவாராயினர். சின்னாட்குப் பிறகு முருகப்பெருமான் அம்பிகைமார்களையடைய வேண்டிய வேட்டுவ வடிவத்தோடவணடைந்து ஆண் டிருந்த மாளிகைக்குள் நுழையாநிற்ப, பாலசித்தர் தடுத் தனர். அதனால் பெருமானுக்கும் சித்தருக்கும் பலவித மாகப் போர்நிகழ்ந்தது. சித்தரும் அம்பிகைமார்களின் திருவருளால் அவர்களால் அளிக்கப்பட்ட பாதுகையின் மேற்கொண்டு பெருமானோடு இளைக்காது போர்நிகழ்த்தி அவரால் விடப்பட்ட வேலாயுதத்தையும் கைப்பற்றினர். அதுகண்ட முருகப்பெருமான் மல்யுத்தம் செய்ய, அத னால் இளைத்த பாலசித்தர், முருகப்பெருமானது ஸ்பரிஸ

உணர்ச்சியால் மெய்யுணர்ந்து அப்பெருமானை வணங்கிப் பலவாறு தோத்தரித்து, உமது பெருமையினை அறியாது போர்செய்த குற்றத்தை மன்னித்து, சாபநீக்கம் செய்தருள வேண்டுமென வேண்டினர். முருகப்பெருமான் அதனைக் கேட்டு, மகிழ்வுற்று அன்ப! உனது குற்றத்தைப் பொறுத்தோம். சாபத்தையும் நீக்கினோம். தவப்பயனும், ஞானமும் உண்டாக அருளினோம். உலகு வேத நெறியினின்றும் மாறுபடுவதை மாற்றுமாறு தோன்றிய நீ, அவ்வறத்தை வளர்த்து இம்மயிலத்து என்றும் நம்மோடு வசிப்பாயாக என்று அருள்செய்து அவர் விரும்பியபடிச் சித்தகன்னிகையராக ஆண்டுவிளங்கும் அம்பிகையிருவரையும், சித்தர் தத்தநீர் வார்த்துக் கொடுக்க மணந்துகொண்டு, சித்தரை நோக்கி வேண்டிய வரம் எவை என வினவினர்.

பாலசித்தர் பெருமானுடைய திருவருளை யேத்தி சுவாமி! இம்மலையின்மீது இக்கலியாணகோலத்தோடு எப்போதும் தங்கியிருந்து அன்பர்களுக்கு அருள்புரிய வேண்டும். மேலும் அடியேனால் உண்டாக்கப்பட்ட இம்மடத்தில் அடியேனுடைய சீடபரம்பரையினர் மடாதிபதிகளாக எழுந்தருளி அடியவர்கட்கு உபதேசம் செய்து கொண்டிருக்க வேண்டுமென விரும்பிக் கேட்டனர்.

முருகப் பெருமான் அவ்வாறே அருள்செய்து திருக்கோயில்கொண் டெழுந்தருளிப் பாலசித்தருக்கு விமான முதலியன அளித்துப் பக்குவர்க்கு உபதேசம் செய்யப் பலவிடங்களுக்கும் அனுப்பினர். பாலசித்தர் பெருமுக்கல் மலையையடைந்து சின்னாள் தவஞ் செய்வாராயினர். அப்போது தில்லையிலுள்ள பச்சைக்கந்த தேசிகர் மரபிலுதித்த அம்மவை அம்மையார் என்பவர் கணவனோடு

பெருமுக்கல் மலையையடைந்து, புத்திரப்பேற்றை விரும்பிச் சித்தர் திருவுளப்படியே தினந்தோறும் திருவமுது செய்யச் சதுரக்கள்ளிப் பாலைக் கறந்து கொடுத்துக் கொண்டுவருவாராயினர். ஒரு நாள் சித்தர் கருணைகூர்ந்தளித்த கள்ளிப்பால் பிரசாதத்தால் அம்மவைக்கு ஓர் ஆண்புதல்வர் தோன்றினார். அப்புதல்வர் சித்தருக்குத் தொண்டுபூண்டொழுகி அருகிலேயே யிருந்து வருபவரானார்.

பின்பு பாலசித்தர் தமது சீடரோடு முன்பு தாம் தோன்றிய கடற்கரையிலுள்ள ஆசிரமத்தில் வதிய, முருகப் பெருமான் தோன்றிச் சித்தர்பால் தொண்டு செய்தொழுகும் புதல்வருக்கு ஆசாரிய அபிஷேகமும், ஞானோபதேசமும் செய்து தமது அம்சத்தில் ஒருகூறு பதியும்படிச் செய்து " நீ பாலை உணவாகக்கொண்டு சீட பரம்பரையோடு சிவஞான பாலய தேசிகனென வாழ்வாயாக" என்று அனுக்கிரகித்துச் சித்தரை நோக்கிப் பிரமநிலை யுணர்ந்த நீ பாலவயதோடும் தங்கியிருந்தமையின் இவ்விடம் பிரமபுரம் எனவும் இம்மடம் பாலசித்தர் மடம் எனவும் வழங்குவதாக! என்று அனுக்கிரகித்து மறைந்தனர். பாலசித்தர் பின்பு பன்னாள் அடியவர்க்கருளிச் சிவஞானியாகிய சீடரை யிருத்தி மயிலமலையில் முருகப்பெருமான் சந்நிதிக்குத் தென்பக்கத்தில் விளங்கும் சிவலிங்க மயமானார்.

பாலசித்தர் கடலின்கண் தோன்றினார் என்பதனை "கட்னடு விழிந்து கரைமடத் தவிர்தரு, திடமலி பாலய னுதிய சித்தர்" (மயிலாசலக் கலம்பகம் 24) என்ற அடியாலுணரலாம்.

பாலசித்தர் சதுரக்கள்ளிப் பாலையுண்டு இருந்தனர் என்பதை "பாலயப் பெயர்கொள் தேசிகன் கள்ளிதரு

பால்குடித்து மகிழ்கூர்பவன்" (புலவர் புராணம்: சிவப்– சருக்கம் 28) "அத்தகையார் எவரெனின் அருஞ்சதுரக் கள்ளிப்பால் நித்தியமும் உணவாக்கும் நியமமுடைத் தவராசர், சித்தர்புகழ் பாலய தேசிகர்" (சிதம்பர சுவாமிகள் சரித்திரம் செய்யுள் 15) என்ற அடிகளால் அறியலாம்.

பாலசித்தர் முருகப் பெருமான் சந்நிதியின் வலப் பக்கத்திலுள்ள சிவலிங்க மயமானு ரென்பதனை "...... மயிலாசலத்தின் குவட்டிலுறுங் கோயிலிடை மண்டு சடைச் சிவஞானி வலத்தமர வாழ்கின்ருய்" (மயிலா சலக் கலம்பகம் செ. 1) "கொள்ளிபோல் மணித்தலை நாகங் கிடக்குமயிலை மலைக்குகையில் வாழுந் தெள்ளு வான முதலனைய சிவஞானி" (சி. கலம்பகம் 35) "வேலு டையானெடு மயிலைமலை மேவுசிவ ஞானி" (சி. கலம்ப கம்) என்ற அடிகளால் அறியலாம்.

பாலசித்தர் கலியுகாதி 3246 க்கு மேல் 4246 வரையி லுள்ள 1000 [ஆயிரம்] ஆண்டுகள் இருந்தா ரென்றும், சதாசிவ பாலயசுவாமி என்னும் பெயர் வழங்கப் பெற்ரு ரென்றும் அறியக்கிடக்கின்றது. வீரசைவம் மலர் 1. இதழ் ஏழாலும்,

" பரிசித்த வளவிலே வேதிக்கு மாக் குளிகையிற்
பாரெலாம் புனித மாக்கும்
பாதபங் கேருகச் சதாசிவச் சிவஞானி "—சிறுதேர் - 2

என்று இலக்கண விளக்க ஆசிரியர் திரு. வைத்தியநாத தேசிகர்அருளிய மயிலம் ஸ்ரீமுருகன் பிள்ளைத்தமிழாலும் அறியலாம். பாலசித்தர் மறைந்தருளிய சிவலிங்கப் பெரு மானுக்கு இப்பொழுது விஸ்வநாத ரென்று பெயர் வழங்கப்படுகிறது. பிற்காலத்து, சுவாமிக்கு, அம்பாள்

இருக்க வேண்டு மென்ற கொள்கைப்படி, சுவாமிக்கு நிருதி மூலையில் விசாலாட்சி என்ற பெயருடன் ஓர் அம்மன் ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது.

ஸ்ரீ சுப்ரமண்யசுவாமி வள்ளி தெய்வயானை சமேத ராய்க் கீழ்த்திசை நோக்கி, நின்ற திருக்கோலத்துடன் காட்சி யளிக்கிறார். மயில் இத்தலத்தில் வடக்கு நோக்கிய முகத்தோடு நிற்பது அதிசயம்.

ஆதிசுவாமிகள் நிஷ்டை செய்து வந்த ஒடுக்கம் கோயிலின் உட்பிரகாரத்தி லிருக்கிறது. கல்லறை யொன்று உட்பிரகாரத்தின் வடக்குப் பக்கத்தில் மணி மண்டபத்திற்குக் கீழிருக்கிறது. இதனுள் ஒருவர் தாராளமாக உட்காரலாம்.

## இரண்டாவது பட்டம்

இரண்டாவது பட்டத்துச் சிவஞான பாலய சுவாமி கள் முருகப்பெருமானால் ஆச்சாரியாபிஷேகம் பெற்றுப் பிரமபுரமென்னும் பொம்மயபாளையத்திலும் மயிலத்தி லும் வீற்றிருந்தார். இதனை

"எனவுரைத்த வாறன்னோன் சீடனுக்குச்
சிறப்பாதி யீந்த மர்த்திப்
புனையுமக்க மணிநீறு தாரணஞ்செங்
கலிங்கமின்ன பூணச் செய்தே
யினியபா லருந்தியுறத் தன்னமிசத்
தோரமிச மிருத்தி யென்றுங்
கனைகடற்பார் தொழச்சிட பரம்பரையின்
வாழ்கவெனக் கருணை கூர்ந்தே"

—மயிலம் தலபுராணம் திருமணச்சருக்கம் - 71.

" .....................அவனிவட்டத் தடரும்
வன்கலிக் கோடை தணியத்
தான்மாரி பெய்தன்ன நிதிமாரி பெய்யுமிரு
தாமரைச் செங்கை யாளி
தயவாளி சிவஞான தேசிகர்க்கும் பழஞ்
சதுர்மறைப் பொருள் விரித்து "
—மயிலம் முருகன் பிள்ளைத்தமிழ் செங்கீரை - 1

" நாடற்கரிய மறைமுதலை
நம்பன் கேட்ப வுரைத்தபடி
ஞாலம் புகுந்து சிறந்தசிவ
ஞானி யுணர முறைவிரித்து "
—ஷை வாராணைப்பருவம் - 1

" .....................பணிப்பா ரெலாந்
தெருளுமால் பாலரிய அட்டமா சித்தியுஞ்
சின்மயாநந்த நிலையுந்
தேருமெண்ணெண் கலையுநண்ணு வண்ணந்தந்து
சிவஞான தேசிகேந்திரற்கு
அருள்சுரந் துதவிய வுணவர வழைத்தன
னம்புலியாட வாவே "      —ஷை அம்புலி - 1

" மவுனமொழி யாலுரைத் தெங்கள் சிவஞானிதன்
மணிமௌலி மீது வைத்த
செந்தாமரைக் கைத்தலஞ் சிவப்பூரநீ
சிறுபறை முழக்கியருளே "—ஷை. சிறுபறை - 1

" அறிவதை யறிந்தார் மூவரறுமுகக் குரவன் றன்பான்
முறைவரு வருண முற்று முக்கணன் குருவென்றன்பு
செறிகிலன் மலய வெற்புச் செஞ்சடை முனிவன் யாக்கை
குறியவன் குறுகி லானெங் கோன்சிவ ஞானி தானே.
—சிவஞான பாலயசுவாமிகள் கலம்பகம் - 93

என்பனவற்றாலறியலாம்.

இந்தச் சுவாமிகள் பச்சைக்கந்தர் மரபில் தோன்றி ஞர். என்பதனை "பச்சைக்கந்தமாமுனி கரத்துதித்தாய்" (சி. பா. கலம்பகம் 50) என்ற அடியாலும் அம்மவை புதல்வரென்பதனை "செய்தவம் பெருகும் அம்மவை வளர்க்குங் குழவி செங்கீரை யாடியருளே" (சி. பா. பி, தமிழ், செ. ப, 6) "அன்புகொண்டக நெகிழ்ந்தணி வளர்க்க நினையும் அம்மவைக்கருள் தருங்குழவியான பரிசும்" (பாசவதைப் பரணி 50) என்ற அடிகளாலும் இவர் முருகப் பெருமான் கட்டளைப்படி பாலையே உண வாகக் கொண்டிருந்தார் என்பதனை "மயிலைவாழ் அமுதபானமார் ஞானமாதவனே." (சி. கலம்பகம்) "மயிலைவெற்பிற் பாலுண்டு பாலைய னென்றிருந்தாய் கொலெம் பாலையனே" (சி. கலம்பகம் 27) "இனிய பாலருந்தியுற" (ம. த. பு. தி. 71) "முன்னுளிலொரு ஞான முனையயின்ற வாரமுத மென்னுளு முண்கின்ருய்" (சி. கலம்பகம் 1). என்ற அடிகளாலும் இதுவரைப் பட்டத்தமர்ந்துள்ள சுவாமிகள் அனைவரும் பாலையே உணவாகக் கொண்டிருக்கின்றமையாலு மறியக்கூடும்.

சுவாமிகளிவ்வாறு பொம்மபுரம், மயிலமிவ்விரு தலங்களிலும் மாறிமாறி வசித்து வந்தவர், காஞ்சியிற் சென்று ஏகாம்பரஈசுரரைத் தரிசிக்கச் சென்றனர். சென்று அங்கரில் தங்கியிருக்கும்போது பல அன்பர் கட்கு அருள்புரிந்து வருங்கால், விஷந் தீண்டியிறந்த ஒருவனை ஒரு அன்பர் வேண்டுகோட்கிணங்கி நீறு இட்டு உயிர்ப்பித்தனர். அதுவுமன்றி அவ்விடத்து எப்போதும் விஷவாதனை இல்லாதிருக்கவும் அருள் செய்தனர். "திளைக்குங் கருணைச் சிவஞானதேவன் றிருக்கைத் திருநீறே......விடத்திற்கருஞ் சீர்க்கலுழ னும்" என்னும் கலம்பகச்செய்யுள் இதனை உணர்த்தும்.

காஞ்சியம்பதியில் அருந்தமிழ் நாடொருகோடி தவஞ்செய வந்ததிர் வெள்ளருவி தூங்குயர் மயிலேவரை சிவஞானபாலய சுவாமிகள் அற்புதமூர்த்தியாய் விளங்கு வதை, அந்நாட்டையாண்ட நவாபு உணர்ந்தான். தன் மனைவிக்கேற்பட்ட சூலேநோயைச் சுவாமிகளின் அரு ளால் தீர்த்துக்கொள்ள விரும்பினான். இல்லா ளொடும் சுவாமிகளின் சந்நிதியை அடைந்து வணங்கித் தனது குறைகளை நீக்குமாறு விண்ணப்பித்துக் கொண் டான்.

சுவாமிகள் அவனைநோக்கி, ஏகாம்பரேசர் சந்நிதி யில் உன்னாற் குறைக்கப்பட்ட நித்ய நைமித்தியங்களை முன்போல நடத்துக! என்றாணையிட்டு விபூதியால் அந் நோயைத் தீர்த்தனர். நவாபு பெருமகிழ்ச்சியுற்று ஏகாம் பரேசருக்கு, ஆலய நிவேதனங்கள் முன்னினும் பன் மடங்கேற்படுத்தியும், சுவாமிகள் அங்கு தங்கியிருத்தற் குரிய திருமடங்கட்டுவித்தும், விளைநிலங்கள் பல தானம் செய்தும் விடைபெற்றுச் சென்றான். *

சில நாட்களுக்குப்பின் சுவாமிகள் அவணின்றும் பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு செய்யூரை அடைந் தனர். அங்குள்ள வேளாளர், சுவாமிகளைப் பரிசோதிக்க ஒரு புதுக்குடத்தில் மணலை மறைத்துக் கொண்டுவந்து கொடுத்தனர். சுவாமிகள் அம்மணலைச் சர்க்கரையாக்கி அங்குள்ளவர்க்கு அளித்தனர். அதனால் அவ்வேளாளர் மகிழ்ந்து நிலமுதலியன விடுத்துக் கட்டப்பட்ட திரு

---

* இம்மடம் விளைநிலம் பிறர்வசப்பட்டு, இப்போதுள்ள 18-ம் பட்டம் சிவஞானபாலயசுவாமிகள் காலத்து கோர்ட்டு மூலமாக சுவாதீனமாயிருக்கிறது.

மடத்தில் * சின்னுளிருந்தனர். இதனை "பொய்யர் சிலர் மாலையிட்டு மணலோடு வெண்கல் லடையுமா குடத்தி னிடை சீனி கண்டு ஒல்வகைசெய்து ஓலைபெற்று அவர் செய்வேலையுங் கொள்ளுமுனி" (புலவர் புராணம் சி. சருக்கம் 28) என்பதனுலுணரலாம். பின்பு தென்தேச யாத்திரை செய்யப் புறப்பட்டுச் சுவாமிகள் தில்லை முதலிய தலங்களை வணங்கி மதுரையை யடைந்து இறையை வணங்கி எழுந்தருளி இருந்தார்.

மதுரையில் தையற்காரன் ஒருவன் புத்திரப் பேற்றை விரும்பி மீனுக்ஷியம்மன் சந்நிதியிற் கட்டுதற்கு 64 திருவிளையாடலையும் தையலாற் சித்திரித்த ஆடையை அம்மன் கனவிலருளிய கட்டளைப்படிச் சுவாமிகள் சந் நிதியில் வைத்து வணங்கினுன். சுவாமிகள் அம்பிகையின் திருவருளை மகிழ்ந்து அவனுக்கும் அவன் மனைவிக்கும் திருநீறளித்து மூப்பகற்றி இளமைதந்து புத்திரப் பேற்றையு மளித்தனர். "திளைக்குங் கருணைச் சிவ ஞான தேவன் திருக்கைத் திருநீறே, மலடர்க் கரிய மக வாகும்" (சி. கலம்பகம் 44) என்ற அடி இதனை உணர்த்தும். சின்னுட்குப் பிறகு சுவாமிகள் ஆண்டி ருந்து புறப்பட்டுப் பல தலங்களை வணங்கித் திருமுது குன்றம் வந்து இறையைத் தொழுது மீண்டும் பிரம புரம் போந்து தெய்வீக சித்தோடு விளங்கி வந்தார்.

இவ்வாறு விளங்கி யருள்வதைக் கூனிமேடு என் னும் பக்கத்து ஊரிலுள்ள மாந்திரீகன் ஒருவன் கேள்வி யுற்றுச் சுவாமிகள்மீது அழுக்காறு கொண்டவனுகிச் செஞ்சியிற் சென்று, திரியம்பக மகாராஜனைக் கண்டு,

---

* உப்பளமும் ஜீர்ணதிசையிலுள்ள மடமும் இப்பொழு தும் மடத்திற்குச் சுவாதீனமாகவுள்ளன.

சுவாமிகள் பலரை ஏமாற்றுவதாகப் பல கூறி அவ்வர சனை அழைத்துவந்து காட்டினுன். அரசன், மாந்திரி கன், சிவஞான பாலய சுவாமிகள் இருவரையும் தர்க்கம் செய்யச் சொல்லி அதனுல் உண்மையில் உயர்ந்தவரைக் காணமுடியாது, இருவரையும் கடலிற் கட்டியிடின் சுகமாக முன்னங் கரையேறுபவரே சிறந்தவராவர் என்று கூறி இருவரையும் தோணியிலேற்றிக் கடலின் மத்தியிலிடுவித்தான். மாந்திரிகன் அங்குள்ள மீனுல் விழுங்கப்பட, சுவாமிகள் மட்டும் கடலிற் போட்டவர் கள் கரைசேர்வதற்கு முன்னரே கரையில்வந்து வீற் றிருந் தருளினுர்.

அது கண்ட மன்னன் பயந்து பலவாறு தோத்தரித்து வணங்கி மாந்திரிகனையும் எழுப்பியருள வேண்டுமென வேண்டினன். சுவாமிகளு மவ்வாறே யாகட்டுமென அருள்புரிந்து கடலை நோக்கிக் கூப்பிட உடனே ஒரு மச் சம் கரையை யணுகி மாந்திரிகனை உமிழ்ந்தது.* அதைக் கண்ட அரசன் முதலியோர் மிகவும் வியந்து வணங்கித் தனது கொடிய பகைவரை வெல்லும் பொருட்டு வேண் டிய ஆற்றலைத் தந்தருள வேண்டுமென்று வணங்கின தோடு தனது அருமருந்தன்ன இளவயதுடைய மகளின் கூந்தல் நரைத்திருந்ததை மாற்றியருளவேண்டும்என்றும் வணங்கினுன். சுவாமிகள் திருநீற்றினது பெருமை யினுலேயே, அரசன் விரும்பிய அனைத்துமருளி அவன் மகளது நரைக் கூந்தலையும் கருங்கூந்தலாக அருளினுர். இதனை "இளைக்கு மருங்குலொரு மடந்தைக் கெய்து தவள முகிற் கூந்தலிருஞ்சூன் முகிலின் இருள் படைப்ப" (சி. பிள்ளைத் தமிழ் ந.) "கருநெடுங் கண்ணுடைய

*இம்மீன் பண்டாரக் கெளுத்தி என வழங்கும். இம் மடத்திற்குக் கொடி இதுவே.

வொருமாது குழல்வெண்மை கருமைசெய் திடுமிவர்க்கு” (சி. பிள்ளைத் தமிழ் அம்புலி ங.) என்ற அடிகளா லறியலாம்.

இன்னோரன்ன அருட்செயல் பலவற்றையும் திரியம்பக மகாராசன் கண்டு சுவாமிகளுக்கு அணுக்கத் தொண்டனாகி அடிமை பூண்டொழுகிச் சுவாமிகள் கட்டளைப்படி மயிலத்திலும், பொம்மபுரத்திலும், முருகப் பெருமானுக்குத் திருவாலயமும், சுவாமிகள் பூஜைசெய் தற்குத் திருமடமும் கட்டுவித்துச் சில கிராமங்களைச் சர்வமானியமாகச் சிலாசாசனம் எழுதி நியமித்தான், மேலும்,

| | |
|---|---|
| யாளிமுக பாலீகை | பானுவட்டம் |
| யாளித் தடி | தூபபீடிகை |
| மகரவட்டம் | பகல் தீவட்டி |
| பச்சைத் துவசம் | அருகு |
| யாளிமுக க்ஷாமரம் | பாலா |
| ராசதோட்டி | மகரடாலி |
| ஏகசத்திரம் | புருசு |
| ரிஷபத் தடி | ருத்திரசங்கம் |

—வீரசைவம் - 1. மலர் - 7

ஆகிய பதினாறு விருதுகளையும் காணிக்கையாகக் கொடுத்தான்.*

---

*இவ்விருதுகள் பின்னால் ஆட்சிக்குவந்த நவாபுகாலத்தில் சுவாமிகளுக்குரியதென்று அரபி பாஷையில் எழுதப்பட்டிருக்கிறது. இன்னும் நவாபு கொடுத்த அறிக்கை முதலியவற்றை வீரசைவம் மலர் 1. இதழ் 7ல் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. அவை வருமாறு:—1165ம் பசலி ஜபர்மீ 26தேதி (கி. பி. 1756) அய்தராபாக்கத்துக்குக் கீழ்ப்பட்ட சர்க்கார் செஞ்சி

இவ்வாறு சிவஞான பாலயசுவாமிகளை மிகஅருமை யாகப் போற்றி, அரிதிற் பிரிந்து அரசன் தன்னகரடைந் தான். அக்காலம் நடுநாட்டின் சில பகுதிகளையாண்ட சிதம்பர பூபதி என்பவர் பகை அரசரால் துரத்தப் பட்டுச் சுவாமிகளை அடைந்து பணிபுரிந்து வந்தனர். சுவாமிகள் அவர்மீது பேரருள் கொண்டு அப்போது அவரிடமுள்ள கொஞ்ச சேனையைக் கொண்டே பகைவனை வெல்லுமாறு அருள் செய்தனர். சிதம்பர பூபதியும் அங்ஙனமே சென்று பகைவரை வென்று மீண்டும் சுவாமிகளிடம் வந்து அணுக்கத் தொண்டராக இருந்து ஆசி பெற்றுத் தன்னூர் சென்று வாழ்ந்து

---

முதலான தாலூகாக்களில் இப்போதிருக்கிற ஆமீல்தாரர் களுக்கும் மேல்வருகிற ஆமீல்தாரர்களுக்கும் அறியப்படுத்து கிறது என்னவென்றால், ஞானராஜதானியாகிய பொம்மய பாளையம் பெரியமடம் சிவகஞ்சி மயூராசல நிவாசர் எதிசுர கர்த்தரான ராசகுரு பாலையசுவாமியார் அவர்கள் தலங்களில் சுவாமி தரிசனத்திற்காகவும் தேசங்களி லிருக்கிற மடங்களின் விசாரணைக்காகவும் சிஷ்யயாத்திரைக்காகவும் விஜயஞ் செய்வ தற்காக, இதனடியிற் கண்டிருக்கிற பிருதுகள் வகையராக்கள் மாமூலமாய் சுவாமிக்குப் பரம்பரையாய் நடந்து வருகிறதென் றும், இதை யாவரும் ஆக்ஷேபிக்கக் கூடாதென்றும் முன்னே யிருந்த நவாபு சூப்பகாற் கான்பாதர் தாவுத்துக் கான்பாதர் அவர்கள் தாக்கிதுகளும் முன்னமே உண்டாயிருக்குது. இப்ப வும் உங்களுக்குத் தெரிவிக்கிறதென்னவென்றால், மேற்படி சுவாமி இப்போது மடம்விட்டு சஞ்சாரம் வருகிறபடியினாலே எங்தெந்த கோவில்களில் வந்தாலும் அவாளவாள் இலாக்காக் களில் யாதொருவித்தியாசமும் வராமல் ஜாக்கிரதையாயிருந்து நடப்பிக்கவும்.

அவாளுடைய சாமான்களை சவரக்ஷணை செய்துகொள்ள வேண்டியதுக்காக எட்டுத் துப்பாக்கி சனமும் எட்டுக் கத்தி

வருவாராயினர்.* இவர்கள் காலத்து அருணகிரிநாதர் வந்து மயிலம் முருகனைத் தரிசித்துத் திருப்புகழ் பாடி இருக்கின்றனர்.

அக்காலத்துப் போரூரிலிருந்த சாந்தலிங்கசுவாமிகள் "கிளக்கிலா நா, மணியினுவேயாகக், கேட்கிலாக் காதூசியின் காதாக வளர்க்கு மாபுகழுலகிற் பரப்பா நின்ற" சிவஞான பாலயசுவாமிகளது செயற்கருஞ் செயலைக் கேள்வியுற்றுத் தரிசிப்பான் வேண்டி வந்தனர். இடையில் தொண்டை மண்டலத்துக் காஞ்சியில் வாழ்ந்த குமாரசாமி தேசிகரின் புதல்வரும் கற்பனைக் களஞ்சியம்

---

சனமும் யாத்திரைக்கு வைத்துக் கொள்ளும்படிக்கு உசூரில் உத்தரவு கொடுத்திருக்கிறது.

மேலும் துஷ்டாளாலேயாவது கள்ளராலேயாவது தொந்திரவு நேரிடுகிறதாய் சுவாமிமனுஷாள் உங்களுக்குத் தெரிவித்தால் அவாள் அவாள் இலர்க்காபரியந்தம் வித்தியாசங்கள் வராமல் பந்தோபஸ்தா யிருந்து நடத்தினதற்கு உடனே உசூருக்குத் தெரிவித்துக்கொண்டு வரவும். இதனாலே நம்முடைய யோகத்துக்கும் ஆயிசுக்கும் பிரார்த்தனை செய்துகொண்டு வருவார்கள்.

இது ஏழாவது பட்டம் மாத்தூர் பாலய சுவாமிகள் காலத்து ஹைதராபாத் நவாபு ஊம்தாதுல் முல்குசிராஜுட்டவுலா அங்வாரூடீன், கான்பகதூர் மான்சூர் ஜங்க் அவர்கள் அரபிபாஷையில் கொடுத்த அறிக்கையின் மொழிபெயர்ப்பு.

இதனால் திரியம்பகமகாராஜன் காலத்துக்குப் பிறகு வந்த அரசர்கள் நவாபுகள் எல்லாரும் திரியம்பக ராஜன் கொடுத்த விருது அறிக்கைகளை ஆதரித்ததாகத் தெரிகிறது. 17வது பட்டத்து சுவாமிகள் காலத்தும் அதனை அனுசரித்து, கோர்ட்டுக்குப் போகவேண்டியதில்லை என்று (எக்சமிஷன்) இங்கிலீஷ் கவர்மெண்டாரால் அளிக்கப்பட் டிருக்கிறது.

* சிதம்பரபூபதி திருமுதுகுன்றத்தில் மடம் கட்டி வைத்திருக்கிறார்; அது தற்போது மடத்தின் சுவாதீனத்திலில்லை.

என்று புலவர்களால் புகழப் பெறுபவரும் துறைமங்க லத்தில் சின்னுள் வதிந்த வருமான சிவப்பிரகாச சுவாமி களைக் கண்டனர். இருவரும் "புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான் நட்பாங்கிழமை தரும்" என்ற பொய்யா மொழிக்கிணங்க அன்புகொண்டவர்களாகிச் சேர்ந்து பொம்மபுரத்தை யடைவாராயினர். சென்ற இருதகையினரும் பொம்மயபாளையத்துக் கருகிலுள்ள புத்துப்பட்டில் அருணன் மேற்றிசை யடைந்தன ஞாத லின் இரவு தங்கினுர்கள். அவ்வமயம் சாந்தலிங்க சுவாமி கள் சிவப்பிரகாச சுவாமிகளிடம் ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகளின் அருஞ் செயல்களைக்கூறி அப்பெரியாரைக் காணுதற்குக் கையுறையாக ஏதாவது தோத்திரப்பாடல் கள் பாடிச்செல்ல வேண்டும் எனச் சிவப்பிரகாசசுவாமி கள் யான் நரஸ்துதி செய்யும் வழக்கம் இல்லையென மறுத்துவிட்டனர். பிறகு அங்கு ஒரு கோயிலின் புறத்தில் இருவரும் துயில்கொள்ளும் சமயம் ஸ்ரீ சிவசுப்ரமணியக் கடவுள் மயில் வாஹனுரூடராய்ச் சிவப்பிரகாசசுவாமி கள் கனவில் தோன்றிப் பல விடுதிமலர்களைக் கொடுத்து இதனை மாலையாகத் தொடுத்துத் தருவாயென ஆணை யிட்டு மறைந்தனர். சுவாமிகள் உடனே உறக்கத்தினின் றும் நீங்கி, சாந்தலிங்க சுவாமிகளிடம் கனவினை அறிவித் தனர். சாந்தலிங்க சுவாமிகள் முருகப்பெருமாஞருடைய அம்சமும் சேர்ந்ததே சிவஞான பாலயசுவாமிகள் ஆத லின், நீங்கள் அவசியம் தோத்திரங்கள் செய்வது நல மென்று அறிவித்தனர். சிவப்பிரகாச சுவாமிகள் அவ் வாறே சிவஞானபாலயசுவாமிகள் தாலாட்டு, நெஞ்சுவிடு தூது ஆகிய இரண்டு பிரபந்தங்களைச் செய்து இருவரு மாகப் பொம்ம புரமடைந்து சுவாமிகளை வணங்கித் தோத்திரப் பாக்களையும் அரங்கேற்றினர். இதனை

"அன்று சிவப்பிரகாசனரிய துதிதனக் கெய்தச் சென்று பகர்ந்தமை நாடிச் சிவஞான பாலயன் குன்று ளுயர் மயிலமலைக் குமரனுக்குக் கலம்பக மொன்றின்று சொலத் திருப்புகழோனிடத்திலினி திசைத்தானே" (மயிலாசலக் கலம்பகம் பாயிரம்!) "போதன் வாய்விடத் தண்டனை செய்யுங் கடவுள், பூவுநாரு மத்தங் கொடவ னெஞ்சினிடை, பாதசாரியிற் சென்றெனது தொண்டன் மிசை, பாடலாகு மிக்கின்பம் வருமென் சொலிசை, யாதகோர நிற்கொன்றிலிவை கொண்டொருந, லார மேனு நத்தும்படி வனைந்திடென" (புலவர் புராணம். சி. சருக்கம். ௩௦) சென்றுறங்கச் சிகிப்பரியின் மிசைக் குன்றெறிந்த குமரன் குறுகிநேர் நின்று தட்டினிறப்பிய பூக்களையின்று கட்டி யெமக்கணியென்றனன். (சிவப் பிரகாச சுவாமிகள் சீவிய சரித்திர மூலம் 125) "கறையில் பாலயற் குவகை பெருகவோர் கவிக்குரிய, கனவினூர் மலர்க்கொடு செல்வாரத் தமிழ்ந்தன" (மயிலம் கலம்பகம் கஉ) என்பன போன்ற ஆதாரங்களால் அறியலாம்.

கற்பனைச் சிங்கமாகிய சிவப்பிரகாச ச்வாமிகள் சிவஞான பாலய சுவாமிகளை, ஞானசிரியராகக் கொண்டு ஞானதீக்கை பெற்று ஸ்ரீசுவாமிகளுடனே வசித்து வந்தனர். சாந்தலிங்க சுவாமிகள் மட்டும் சின்னுள் கழித்துப் போரூரையடைந்தனர்.

ஒருநாள் சிவஞானபாலய சுவாமிகளும் சிவப்பிரகாச சுவாமிகளும் கடற்கரையில் அமர்ந்து சடுத்தல ஆராய்ச்சிசெய்து வரும்போது சந்திரன் கிழ்த்திசையில் மிக வனப்பொடு உதித்தனன். அதனைக் கண்டு சிவப் பிரகாச சுவாமிகள்.

கடன்முரச மார்ப்பக் கதிர்க்கயிற்ரு லேறி
யடைமதி விண்கழை நின்ருடக்—கொடைமருவு
எங்கள் சிவஞான வேந்தல் இறைத்த மணி
தங்கிய வேதாரகைக டாம்.

என்னும் வெண்பாவைக் கூறினர். பிறகு சிவப்பிரகாச சுவாமிகள் திருமுதுகுன்றம் முதலிய தலங்களே யெல்லாம் தரிசிப்பான் வேண்டி ஞானசிரியரைப் பிரிந்து பல தலங்களிற் சென்று தங்கி மீண்டும் சிவஞான பாலய சுவாமிகள் திருப்பள்ளியெழுச்சி, பிள்ளேத்தமிழ் ஆகிய இரண்டு பிரபந்தங்களேக் குருநாதன்பேரில் செய்து பொம்மபுரம் வந்து ஞானசிரியர் சந்நிதியில் அரங்கேற்றினர். இந்நூலில் சிவப்பிரகாச சுவாமிகள் ஞானசிரியராகிய சிவஞான பாலய சுவாமிகளிடம் தீக்கை பெற்ற விவரங்களேக் குறிப்பித்துள்ளார்.

மும்மைமல முங்கதிர்க் கற்றைவட் டப்பரிதி
  முன்னிருள்செய் திரமதியின்
முழுநில வெறிக்கும்வெண் டிருநீறு ஞானமெனு
  மொய்குழலே மன்றல் புரிவா
ரெம்மணிய தென்றுபுனே நன்முகக் கண்டியுட
  னிறைவனருள் அஞ்செழுத்தும்
இலிங்காங்க சங்கசம ரசநிலேமை யிதுவென்ன
  இருளற வுணர்த்து குருவும்
மெய்ம்மையுணர் வொடுகலந் துற்றிருந் தங்கையில்
  வெளிப்பட்ட ஞானவடிவும்
விளங்கு சரமும் புனித தீர்த்த சிவசேடமும்
  மேலுலகை வித்தென்றவை
தம்மையுல கினில்விளக் கியவந்த தேசிகா
  சப்பாணி கொட்டி யருளே.
தனேயறியு மறிவையறி வென்றசிவ ஞானியே
  சப்பாணி கொட்டி யருளே.

—சி. பிள்ளேத் தமிழ் சப். 4

"அருவடிவ மாகிமன மொழிகடந் துயர்பிரம
மங்கையினு நெஞ்சகத்து
மனுகிவல் சிறைக்கொடியி னிருவிழிக் கொருமணி
யமர்ந்ததென நின்றநிலையைக்
குருவடிவு கொண்டுணர்த் துறுகுண்க் குன்றமே."
—ஷை சிறுதேர் - 1

சிவப்பிரகாச சுவாமிகள் பொம்மபுரத்து மடத்தி னின்றும் சுவாமிகளிடத்து உத்தரவு பெற்றுக் காஞ்சி முதலிய நகரங்கள் சென்று பலநூல்செய்து பொம்மய பாளையத்திற்குச் சமீபமான, நல்லாற்றூரில் இருந்து வருவாராயினர்.

சாந்தலிங்கசுவாமிகளின் சீடரின் சீடரான சிதம்பர சுவாமிகள் திருப்போரூரையடைவான் வேண்டித் தனது குருநாதரான திருமுதுகுன்றம் குமாரதேவரிடம் விடை பெற்று வரும்போது வழியில் பொம்மயபாளையத்தில் தங்கிச் சிவஞானபாலய சுவாமிகளைக் கண்டு வணங்கிப் போரூரடைந்திருந்தார். (இருவரும் ஒருநாள் காலையில் சமயவிசாரணை செய்யவாரம்பித்தார்கள். அப்போது 7 தினங்களான என்றும் அவர்கள் அதனை யறியாது விசாரணையிலேயே ஈடுபட்டிருந்ததாகவும் பரிசாரகர்கள் மாறிமாறி நின்று கால் சோர்ந்தார்களென்றும் சொல்லு கிறார்கள்.)

சிவஞானபாலயசுவாமிகள் அடியார்களுக்கு அன்ன மளித்தலில் அதிகமும் விருப்பமுடையவர்கள் என்று அறியக்கிடக்கிறது. அதனைக் கீழ்க்கண்ட செய்யுட்கள் வற்புறுத்தும். "ஆற்றற் பெரியோ ராற்றுவார்க் காற்றல் பசியை யாற்றுதலென்" றறைந்த மொழியைக்கடந்து சிவனடியாரெனும் நல்விருந்தழைத்துச் சோற்றுக்குவடு தொலைத்த சிறு தொல்லைப்பூத மொருகோடி தொலைத்

தற்கரிய செஞ்சாலிச்சோறுங் கறியுங் கைகவிப்ப வூற்றற் கமைத்த பாறயிர்நெய் யுதிர்திங்கனியு முறைமுறையே யொழுகு பந்தி பலவிருத்தி யுவந்து படைத்துத் தீப் பசியைமாற்றிப் பெருஞ்சீர் பெறுதற்கு வல்லாய் தாலோ தாலேலோ மயிலைவரையிற் சிவஞானமணியே தாலோ தாலேலோ. (சி. பிள்ளைத்தமிழ் தாலப்பருவம் 1) பாக் கியமும் பாலுமுமை புகட்டிய மெஞ்ஞானப் பாலனி யளவிறந்த சிவபெருமானடியார்க், காக்கியிடல் கருதியே யுருத்திர பல்கணத்தார்க் கட்டிட்டல் காணுதேபோதி யோவெனத்தன், றாக்கினிடை யுரைசெய்தா னென்றே யென் றனக்குத் தோன்றுகின்ற துலகில்வே ருெருவ ரிலா மையினுற், சீர்க்கவிஞர் புகழ்மயிலை மால்வரையின் விளக்கே சிவஞான தேவனெனச் சிறந்தவருட் கடலே (சி. கலம்பகம். 52).

சுவாமிகள், இதுபோன்ற பலவரிய செயல்களோடு காஞ்சி, மயிலை, பொம்மயபாளையம் என்னும் பிரமபுரம். சேயூர் முதலிய ஊர்களில் ஐந்நூற்ருண்டுகள்வரை வசித்து, இறைவன் திருவருளை அடையவுன்னிச் சிவப் பிரகாச சுவாமிகளின் மனநிலை யுணர்ந்து வேறு ஒரு பக்குவமுள்ள சீடர்க்கு ஆசாரியாபிஷேகம் செய் வித்து ஆசனத்தமர்த்தி வைகாசி விசாகம் பூரணை கூடிய நன்னுளில் பொம்மபுரத்துத் திருமடத்தில் முருகப் பெருமான் வலப் பக்கத்துக்குக் கீழ்ேயுள்ள *ஒடுக்கத்துள் சென்று சிவநிட்டை செய்து சித்தியால்

---

*மயிலம், காஞ்சி, செய்யூர் முதலிய இடங்களிலுள்ள மடங் களிலும் பூமியின் கீழே ஒடுக்கம் கட்டப்பட் டிருக்கிறது. சுவாமிகள் அந்தந்த இடங்களில் தங்குகின்ற காலத்து ஒடுக் கத்துள் சென்று யோகநிட்டை கூடுவது வழக்கம் என்பது அறியக்கிடக்கிறது.

திருமேனியைத் திருநீருக்கி இஷ்டலிங்க பரசிவத்திற் கலந்தருளினுர். இதனை அறிந்து சிவப்பிரகாசசுவாமிகள் நல்லாற்றூரினின்றும் பொம்மயபாளையம் வந்து ஞானுசிரியர் யோகநிட்டை கூடிய ஒடுக்கத்துள் சென்று பல வாறு தோத்தரித்து வணங்கி தன்னுல் அப்போது பாடி வரப்பெற்ற சிவஞான பாலய தேசிக சுவாமிகள் கலம்பகத்தை அரங்கேற்றி மீண்டும் நல்லாற்றூரையடைந்து யோகாசனத்தில் வீற்றிருந்தருளினுர். கலம்பகம் சிவஞான பாலய சுவாமிகள் ஒடுக்கத்திற்குப்பின் பாடினுர் என்பதை "நானிலம்புகழ் சிவஞான தேவ - வடியே மருளா தறிதரக் கூறுதி-யென்றவன் றனையே யாம்வினு யறிகுதும்-நங்கண் களிப்ப நண்ணுமாயின்-அணியென விறங்கு வெள்ளருவி-மணிமலி மயிலை மலைகிழவோனே" (கலம்பகம் - 46) என்ற செய்யுளடிகளால் அறியலாகும்.

இந்தச் சிவப்பிரகாச சுவாமிகள் துறையூர் மடத்தி லுள்ள சுவாமிகளிடம் ஞானதீக்கைப் பெற்றதாகச் சிலர் கூறுவர். அவருடைய கூற்று உண்மையறியார் கூற் றென அறிஞர்கள் ஒதுக்கிவிடுவார்களாக.

## மூன்றவது ப்ட்டம்*

குண்ணம்பாளையம் சிவஞான பாலய சுவாமிகள் மூன்ருவது பட்ட அதிகாரியாக விளங்கினர். இவர்கள் வீற்றிருந்த காலம் கி. பி. 1645 முதல் 1695 முடிய 51 யாண்டுகள் என்பர். இவர்கள் காலத்தில் இலக்கண

---

*இந்தப் பட்டத்திற்குரியவர்கள் நல்லாற்றூர், சிதம்பரம் இரு இடங்களிலிருந்தே வந்திருக்கிறுர்கள். ஆனுல் இவர்கள் பட்டத்திற்குமுந்தி, கல்வி முதலியவற்றை உத்தேசித்து வெளி யூர்களுக்குச் சஞ்சாரம் செய்வதுண்டு. அப்போது அவர்கள் இறுதியாகத் தங்கியிருந்த ஊரின் பெயரால் அந்த சுவாமிகள்

விளக்க ஆசிரியரும் திருவாரூர்த் தமிழ்ப் பெரும் புலவரு மான ஸ்ரீ வைத்யநாத தேசிகர் என்பவர் மடத்திற்கு வந்து சுவாமிகளைத் தரிசனம் செய்து, பாசவதைப்பரணி என்ற நூலையும், மயிலம் முருகப் பெருமான் மீது பிள் ளைத்தமிழ் என்ற நூலையும் பாடியிருக்கிறார். இவர் பாடிய பாசவதைப்பரணியை பிரம்மஸ்ரீ மகா மஹோ உபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி - டாக்டர். உ. வே. சாமிநாத அய்யரவர்களும் அச்சிட்டிருக்கிறார்கள். பாச வதைப்பரணி யென்னும் நூலானது மிகவும் சொல் நயம் பொருள்நயத்தோடு பாடப்பட்டதாகும்,

தேசிகர் பாடின முருகன்பிள்ளைத் தமிழை 18வது குருமூர்த்தியாய் விளங்கியருளும் சிவஞானபாலயசுவாமி கள் வெளியிட்டிருக்கிறார்கள். பிள்ளைத்தமிழ் சிறுதேர்ப் பருவம் முதற் செய்யுளில், பாசவதைப் பரணியின் வரலாறு முழுவதையு மடக்கிக்கூறியுள்ளார். இன்னும் பலநயங்களைக் கொண்டு திகழ்வது மயிலம் முருகன் பிள்ளைத்தமிழ்.

## நான்காவது பட்டம்

நான்காவது பட்டாதிகாரியாக விளங்கிய சுவாமிகள் சிதம்பரம் சிவஞான பாலயசுவாமிகள். ஆதி சிவஞான பாலயசுவாமிகள் தில்லைக்குச் சென்றிருந்தபோது தங்கி யிருந்த விடத்திற்குப் பாலய்யர்மடம் என்று பெயர். இப்போது அந்தத் தெருவிற்குப் பாலையர்மடத்துத்தெரு

வழங்கப்படுவார்கள். உதாரணம்: குண்ணம்பாளையம் சிவ ஞானபாலய சுவாமிகள், கந்தப்பனூர் சிவஞானபாலய சுவாமி கள், கறையாம்புத்தூர் சிவஞானபாலய சுவாமிகள், மாத்தூர் சிவஞான பாலய சுவாமிகள், கல்யாணப்பட்டணம் சிவஞான பாலய சுவாமிகள் முதலியோர்களாவர்.

என்றுபெயர் வழங்கப்படுகிறது. அந்த சுவாமிகள் பிரதிட்டை செய்த சுந்தரமாயுள்ள வல்லபை விநாயகர் கோயில் இப்போதுமிருக்கின்றது. அக்கோவில் பாலய்யர் மடத்திலிருந்து, நான்காவது பட்டமாகவந்த சுவாமிகளின் சந்ததியாராலேயே பூஜிக்கப்பட்டுப் பாதுகாப்பில் நாளையவரையிலிருந்து வருகிறது. சிதம்பரம் பாலைய சுவாமிகளென்பவர்கள் எல்லாம் இந்தக் கோத்திரத்திலிருந்து வந்தவர்களேயாவர். இப்போது குருமூர்த்தியாய் எழுந்தருளியுள்ள 18ம் பட்டத்துச்சுவாமிகளும், மேற்கூறிய சிதம்பரம் பாலையர்மடத்துத் தோன்றியவர்களேயாவர். மேற்படிப் பரம்பரையினர் அக்கோயிலை ஜீர்ணோத்தாரணம் செய்தும் கும்பாபிஷேகம் செய்தும் வந்துள்ளார்கள். இந்த சுவாமிகள் காலம் கி. பி. 1696 முதல் 1727 முடிய 32 யாண்டுகளென்பர்.

## ஐந்தாவது பட்டம்

கந்தப்பனூர் சிவஞான பாலயசுவாமிகளென்பவர்கள் கி. பி. 1728 முதல் 1733 முடிய ஆறுயாண்டுகள் பட்டாதிகாரியாக விளங்கியருளினூர்கள்.

## ஆறவது பட்டம்

கறையாம்புத்தூர் சிவஞானபாலய சுவாமிகள் என்பவர்கள் கி. பி. 1734 முதல் 1746 முடிய 13 யாண்டுகள் பட்டாதிகாரியாக விளங்கியருளினூர்கள். இவர்கள் காலத்து டூப்ளே என்ற பெயர்பெற்ற பிரஞ்சு கவர்னர் சுவாமிகளைப் பேட்டிகண்டு ஆசீர்வாதம் பெற்றுப் போயிருக்கிறூர் என்பதனை, பிரஞ்சு கவர்னரின் ஏஜண்

டாகவிருந்த ஆனந்தரங்கம் பிள்ளை டைரியால் தெரிய லாம். அந்த நாட்குறிப்பில் எழுதியுள்ளதாவது :—

1744ம் வருஷம் டிசம்பர்மீ 14ம்உ திங்கட்கிழமை (ராக்ஷச வருஷம் மார்கழிமீ 3-ம் தேதி) இன்று காலை 6 மணிக்கு, முரட்டாண்டிச் சாவடியிலிருந்த கவர்னர் டுப்ளே என்னுடைய சத்திரமாகிய திருவேங்கட புரத் திற்குவந்து காலை 8 மணிக்கு காலையுண்டியருந்தி, பகலுந் தங்கி மாலை 4 மணிக்குப் பொம்மயபாளைய மடத்தி லுள்ள பாலய சுவாமியாரவர்களுக்குப் பேட்டியளிக்கச் சென்றார். கவர்னரும் அவருடைய மனைவியும் சுவாமி களுக்கு 6 கெஜ நீளமுள்ள விசாலமான துணியும், 2 பன்னீர் பாட்டில்களும் கொடுத்து மரியாதையாகப் பணிந்து சலாம் செய்தார்கள். பிறகு சுவாமிகள் அவர் களுக்குத் தன் ஆசீர்வாதத்தைக் கொடுத்தருளினார்கள் என்பதாம். (இது சென்னை அரசாங்கத்தார் பதிப்பித்த ஆனந்தரங்கம் பிள்ளை டைரி, வால்யம் ஒன்று, பக்கம் 264-ல் உள்ளது.)

## ஏழாவது பட்டம்

மாத்தூர் சிவஞானபாலய சுவாமிகள் என்பவர்கள் கி. பி. 1747 முதல் 1761 முடிய பதினைந்தாண்டுகள் பட்டாதிகாரியாக விளங்கினார்கள். இவர்கள் பல தலங் களுக்கும் யாத்திரை செய்திருக்கிறார்கள். அக்காலத்து விளங்கிய, நவாபு சுவாமிகளுக்கு யாத்திரைக் காலத்து வேண்டிய நன்மைகளைச் செய்யும்படி தன்னுடைய கீழ் அதிகாரிகளுக்குத் தாக்கீது அனுப்பியிருக்கிறார்.

## எட்டாவது பட்டம்

குமாரச் சார்வாய் சிவஞானபாலய சுவாமிகள் என்பவர் கி. பி. 1762 முதல் 1770 முடிய 9 யாண்டுகள் பட்டாதிகாரியாக விளங்கினார்கள்.

## ஒன்பதாவது பட்டம்

வி. சிவகுன்றம் சிவஞானபாலய சுவாமிகள் என்பவர்கள் கி. பி. 1771 முதல் 1773 முடிய மூன்று யாண்டுகள் பட்டாதிகாரியாக விளங்கினார்கள்.

## பத்தாவது பட்டம்

விருத்தாசலம் சிவஞானபாலய சுவாமிகள் என்பவர்கள் கி. பி. 1774 முதல் 1784 முடிய 11 யாண்டுகள் பட்டாதிகாரியாக விளங்கினார்கள்.

## பதினோராவது பட்டம்

சிதம்பரம் சிவஞானபாலய சுவாமிகள் என்பவர்கள் கி. பி. 1785 முதல் 1809 முடிய 25 யாண்டுகள் பட்டாதிகாரியாக விளங்கினார்கள்.

## பன்னிரண்டாவது பட்டம்

கல்யாணப் பட்டணம் விருபாக்ஷ சிவஞானபாலய சுவாமிகள் என்பவர்கள் கி. பி. 1810 முதல் 1817 முடிய 8 யாண்டுகள் பட்டாதிகாரியாக விளங்கினார்கள்,

## பதின்மூன்றவது பட்டம்

விருத்தாசலம் சிவஞானபாலய சுவாமிகள் என்பவர்கள் பதினெட்டுநாள் பட்டாதிகாரியாக விளங்கினார்கள்.

## பதினுன்காவது பட்டம்

சிதம்பரம் சிவஞானபாலய சுவாமிகள் என்பவர்கள் கி. பி. 1818 முதல் 1843 முடிய 26 யாண்டுகள் பட்டாதிகாரியாக விளங்கினுர்கள். இவர்கள் பொம்மய பாளையம் மடத்தில் முன் மண்டபமும் நடு மண்டபமும் கட்டியருளினுர்கள். இவர்கள் உருவச்சிலை நடு மண்டபத்தில் கருங்கல் தூணில் அமைக்கப்பட்டிருக்கிறது. இவர்கள் காலத்துக் கிழக்கிந்திய கம்பெனியாரால் இந்த மடம் தகுந்த மரியாதைகளைப் பெற்று வந்தது. 1826-ம் ஆண்டு அக்டோபர்மீ 16-ந் தேதி C. D. டர்ஜி துரையவர்கள் மஞ்சக்குப்பத்தில் தங்கியிருந்தபோது எல்லாப் போலீஸ் தாசில்தார்களுக்கும், போலீஸ்களுக்கும், அமீனுக்களுக்கும், கொத்தவால்களுக்கும், கிராம முன்சீப்புக்களுக்கும், மற்றும் பலருக்கும் உத்தரவு பிறப்பித்ததாவது: வழுதாவூர் உதவி ஜில்லாவிலுள்ள பொம்மய பாளைய மடத்திலும் மயிலம் மடத்திலும் வசிக்கும் சுவாமிகள் தங்களுடைய விருதுகளுடன் பிரயாணம் செய்யும்போது. மிருகம், கொள்ளைக்காரர், துஷ்டர் முதலியவர்களால் துன்பமுண்டாகாதபடிப் பாதுகாத்துக்கொள்ள வேண்டியது என்பதை அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## பதினைந்தாம் பட்டம்

நல்லாற்றூர் சிவஞான பாலய சுவாமிகள் என்பவர்கள் கி. பி. 1844 முதல் 1887 முடிய 44 யாண்டுகள் பட்டாதிகாரியாக விளங்கினுர்கள். இவர்கள் காலத்திலேதான் தற்போதுள்ள கோபுரம் கட்டப்பட்டது. உற்சவர் சபாமண்டபமும் இவர்களால் கட்டப்பட்டது. இந்த சுவாமிகளினுடைய வடிவம், கோபுரத்தின்



15-வது பட்டம் ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்

வாயிற்படியின் வடபுறத்திசைச்சுவற்றிலும் சபாமண்டபம் கற்றூணிலும் செதுக்கப்பட்டுள்ளது. இவர்கள் காலத்துத் திருமுதுகுன்றம் தியாகராஜக்கவி என்பவரால் வடமொழியிலிருந்த மயிலம் தலபுராணம் தமிழில் பாடப்பட்டது. அதனை இரண்டாவது பதிப்பாக 18-ம் பட்டமாக இப்போது எழுந்தருளியிருக்கிற சுவாமிகள் வெளியிட்டிருக்கிறார்கள்.

## பதினாறம் பட்டம்

பதினைந்தாம் பட்டத்து சுவாமிகளின் பூர்வாசிரமத்து இளைய புதல்வரான இரண்ய சபாபதி அய்யர் என்னுமியற் பெயருடையவர்கள் 16-ம் பட்டத்து சிவஞான பாலய சுவாமிகளாக, கி. பி. 1888 முதல் 1916 முடிய 29 யாண்டுகள் விளங்கினார்கள். இவர்கள் காலத்துக் கோயிலில் புதுமண்டபம், மேற்புறம் சபை, சுற்றுமதில், வாகன மண்டபங்கள், வாகனங்கள், பல திருவாபரணங்கள் முதலியன செய்யப்பட்டன. இவர்கள் மயிலம் மலையடிவாரத்தில் சந்நிதித் தெருவில் வருமானத்திற்குரிய கட்டடங்களும் மயிலம் மடத்தில் பின்புறம் கட்டடங்களும் கட்டினார்கள். பொம்மபுரத்தின் மடத்தில் இவர்கள் மாடியும் பின்புறக் கட்டிடமும் மடத்துத் தெருவில் வடபக்கத்தில் கட்டப்பட்டிருக்கும் கட்டடங்களும் எதிரில் பாடசாலைக் கட்டிடமும் கட்டினார்கள். சில நஞ்செய்கள் மடத்திற்கும் தேவஸ்தானத்துக்கும் வாங்கினார்கள். இவர்கள் காலத்திற்றான் தண்டபாணி சுவாமிகள் மயிலாசலக் கலம்பகம் பாடி அருளினார்கள். பாம்பன் சுவாமிகள் என்கிற குமர குருதாச சுவாமிகள். கி. பி. 1900 சார்வரி

ஆவணி 29 குருவாரம் மயிலம் வந்து முருகன்மீது தோத்திரப்பாக்கள் அருளிச் செய்தனர்.

## பதினேழாவது பட்டம்

பதினுரும் பட்டத்து சுவாமிகளின் பூர்வாசிரம மூத்த புதல்வரான பொன்னுசாமி அய்யர் என்கின்ற முருகையர் என்னுமியற் பெயருடையவர்கள் பதினேழாம் பட்டத்துச் சிவஞான பாலய சுவாமிகளாக கி. பி. 1917 முதல் 1927 முடிய பதினோராண்டுகள் விளங்கினுர்கள். இவர்கள் காலத்து நந்தவனம் சீர்திருத்தமுடையப் பெற்றது.

## பதினெட்டாவது பட்டம்

பதினேழாம் பட்டத்து சுவாமிகளின் பூர்வாசிரம புதல்வியாரை மணந்து கி. பி. 1928-வது ஆண்டுக்குச் சரியான பிரபவவருடம் மாசிமீ பதின்மூன்ரும்நாள் காலை உதையத்தில் நல்லோரையில் பதினெட்டாம் பட்டமாகத் தற்போது விளங்கியருளும் சுவாமிகள் துறவு பூண்டு சிம்மாசனத் தமர்ந்தருளினுர்கள். இவர்கள் சிதம்பரம் பாலையர்மடம் இரேவணு ராத்திரிய கோத்திர பரம்பரையில் "இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு" என்னும் பொய்யா மொழிக்கு எடுத்துக் காட்டாக விளங்கிய ஸ்ரீ கந்தசாமி அய்யரவர்களின் தவப்புதல்வராக ஜெய வாண்டு ஆடித்திங்கள் ௩-தேதி உத்திராடம் கூடிய நல் லோரையில் அவதரித் தருளினுர்கள்.

இவர்கள் இளவயதிலேயே தமிழ், கிரந்தம் முதலிய கல்வி பயின்று ஒழுக்கத்திற் சிறந்து விளங்கினுர்கள். பட்டம் ஏற்று மயிலம் விஜயம் செய்த அன்று மக்கள்



18-வது பட்டம் ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்

பலருக்கும் ஆசிர்வாதம் கூறிய சுவாமிகள் முருகப்பெருமான், ஆதிகுருமூர்த்திகள் இவர்களது அருளால் தாம் கூடியசீக்கிரம் ஒரு பாடசாலை ஏற்படுத்துவதாகக் கூறியருளினார்கள். இவர்கள் பட்டம் ஏற்ற ஆண்டிலேயே இரதம் செய்வித்தார்கள். நிரந்தரமான வருமானம் முருகப்பெருமானுக்குப் போதுமானதில்லை என்று கருதி நிலம் வாங்கியுள்ளார்கள். பல திருவாபரணங்கள் செய்துள்ளார்கள். வெள்ளியினால், சுருட்டி முதலிய விருதுகளும், தீபாராதனைக் குரிய சோடச அலங்காரதீப வகைகளும் செய்துள்ளார்கள். வைகாசி குரு பூஜை, பொங்கற் புது நாள், பிரம்மோச்சவம் முதலிய காலங்களில் அரிய பெரிய புலவர் பலரால் தமிழ்ச் சொற்பொழிவு ஆற்றச் செய்தும், சுவாமிகளே பல மக்கள் கூட்டம் கூடுகின்ற எல்லாச் சமயத்தும், சமயச் சொற்பொழிவுகளாற்றியும், சமயத்தையும் தமிழையும் வளர்த்து வருகிறார்கள். தேவாரபாடசாலை ஒன்று நடத்தி வருகிறார்கள்.

1937 ம் ஆண்டு திரு. இராஜா முதலியா ரென்பவர் மயிலம் ஆவணக் களரித் தலைவராக வந்தார். அவர் சுவாமிகள், சமயம் தமிழ் ஆகிய இவைகளை வளர்ப்பதிலுள்ள ஊக்கத்தைக் கண்டு, சுவாமிகளை நிரந்தரத் தலைவராக் கொண்ட "முருகன் செந்தமிழ்க் கழகம்" என்ற ஒரு கழகத்தை ஆரம்பித்து வைத்தார், அவ்வாண்டின் இறுதியில். திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளை, B. A., L. T. அவர்கள் தென்னார்க்காடு ஜில்லாவுக்கு, ஜில்லாக்கல்வித்தலைவராக அரசாங்கத்தாரால் நியமிக்கப் பட்டார். அவர் சுவாமிகளின் பண்பைக் கேள்வியுற்று மயிலம் வந்து முருகப்பெருமானையும் சிவஞான பாலய சுவாமிகளையும் தரிசித்தனர். சுவாமிகளின் மனதில் தோன்றி

அரும்பி அம்பலாக இருந்த தமிழ்த் தொண்டு அலர் வதற்குக் காரணமானவர் திரு - ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்களே யாவர். தமிழ்க் கலாசாலைத்தோன்றி யதற்கு அவர்கள் முயற்சி என்றும் மறத்தற் குரிய தன்று. "மேன்மை யுற்ற சிவஞான தேசிகனிவனெனும் மிக்க நாமமொடு மேதினி தழைக்கு முறையால் மானிடப் புதிய கஞ்சுக மணிந்து தமிழ்த்தேர் மயிலைமால் வரை வளம் பெருக வந்த பரிசும்" (பாசவதைப்பரணி 51) என்று இலக்கண விளக்கம் வைத்திநாத நாவலர் கூறிய தற்கு எடுத்துக்காட்டாக விளங்கிய இந்த சுவாமிகள் 14-7-1938 அன்று, ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி என்னும் நாமத்தோடு ஒரு தமிழ்க் கலாசாலையைத் திறந்துவைத் துள்ளார்கள். அதனை மேன்மை தங்கிய பல்கலைக்கழகத்தா ராணையின்படி இவண் கமிஷனராய் வந்த திரு - வித்வான் E. K. நடேச சர்மா அவர்கள், சுவாமிகளேற்படுத்திய தமிழ்க் கல்லூரியைப் பார்வையிட்டு, உள்ளது உள்ளபடி ரிப்போர்ட்டு செய்த நன்றிமிகவும் பாராட்டத் தக்கது. அதில் தற்போது நாற்பது மாணவர்களுக்கு இலவச வுணவு அளித்து வருகிறார்கள். இக்கலாசாலை அரசாங் கத்தாரால் ஒப்புகொள்ளுதற்காக வேண்டிய உதவியைச் செய்த ஹிந்துமதபோர்டு தலைவர் திரு - திவான்பகதூர். T. M. நாராயணசாமிப்பிள்ளை, M. A., B. L. அவர்க ளுக்கும் ஷை போர்ட்டு கமிஷனர்களாகிய ராவ்பகதூர் C. M. இராமச்சந்திர செட்டியார், B. A., B. L. அவர் களுக்கும், A. S. மண்ணுடி நாயர் (*Bar-at-law*) அவர் களுக்கும், P. காமேஸ்வரராவ், M.A.,B.L. அவர்களுக்கும் என்றும் தமிழுலகம் கடமைப்பட்டதாகும். இக்கலா சாலை 1941-1942 முதலாக அரசாங்கத்தாரால் ஏற்றுக்

கொள்ளப்படும் என்ற செய்தியானது ஸ்ரீ சுவாமிகள் செயல் விளக்கமுறுவதற்கான காலம் என்பதை அறிஞர்கள் யாவரும் அறிந்ததாகும். சுவாமிகள் தமிழ்க் கல்லூரி கட்டுதற்குரிய வசதிக்கு முருகப்பெருமான் திருவருளும் ஆதிகுருமூர்த்தியாகிய ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகளின் திருவருளும் முன்னின்று முடிப்பதோடு தமிழ்ப் பெருமக்கள் பெரிதும் ஒத்துழைக்க முன்வருவார்களென்றும் இறைவனை இறைஞ்சுவோமாக. இன்னும் தமிழும்சமயமும் வளர்த்தற்குரிய செவிலித்தாயாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள் புகழும் கீர்த்தியும் ஒருங்கெய்தி, பெண்ணையாற்று மணலினும் பன்னாள் வாழ்வதாக என்று இம்மலையில் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ வள்ளிதெய்வானை சமேத ஸ்ரீ முருகப்பெருமானையும் ஆதிசிவஞான பாலயசுவாமிகளையும் பிரார்த்திப்போமாக.

## ஆலயத்தின் முக்கியக் குறிப்பு

### தினபூஜையும் திருவிழாவும்

கோவிலில் தினந்தோறும் காலை உச்சி மாலை இரவுஆகிய நான்குகாலங்களிலும் அபிஷேக தீபாராதனைகள் நடந்து வருகின்றன. பஞ்சபர்வ உற்சவங்களும் கார்த்திகை உற்சவங்களும், வசந்த உற்சவம், பிரம்மோத்சவம், கந்தர்சஷ்டி உற்சவம் முதலிய உற்சவங்களும் நடைபெற்று வருகின்றன.

அவை வருமாறு ;— பஞ்ச பருவங்கள், மாதப் பிறப்பு, சஷ்டி, அமாவாசை, பௌர்ணமி, பரணி, பிரதோஷம், சுக்கிரவாரம் முதலியன. மாத உற்சவங்கள்:— சித்திரை, வைகாசி, கார்த்திகை, தை மாதங்களில் வரும்

கார்த்திகை நட்சத்திரங்களில் தங்க மயில் வாகனத்தி லும் மற்றைய கார்த்திகை நட்சத்திரங்களில் விமானத் திலும் முருகப் பெருமானது உலா நடைபெறும்.

நடராஜர் அபிஷேகம் ஆறும் உண்டு. ஆனித் திரு மஞ்சனம், மார்கழித் திருவாதிரை இரண்டிலும் நடரா ஜப் பெருமானுடன் பஞ்சமூர்த்திப் புறப்பாடு நடை பெறும்.

சித்திரை வசந்தம் 10 நாள் உற்சவம்.

வைகாசி விசாகம் அபிசேஷக உற்சவம்.

ஆடிமீ பரணியில் கண்ணுடிப்பல்லக்கு உற்சவம்.

ஆடிமீ பதினெட்டில் செந்தூர் ஆற்றுவிழா.

புரட்டாசிமீ நவராத்திரி உற்சவம்.

ஐப்பசிமீ கந்தர்சஷ்டி உற்சவம். ஆறுமுக மூர்த்தி, விரவாகு தேவர் புறப்பாடு ஏழு தினங்களுக்கும் நடை பெறும்; கடைசி நாள் திருக்கல்யாணம்.

தைமீ தைப்பூசம் விசேட அபிடேகம். 1008 சங் காபிடேகம்; இரவு தங்கமயில் வாகனக் காட்சி.

மாசிமகம் உள்ளூர் தீர்த்தவாரி. புதுவைக் கடல் நீராட்டு உற்சவம்.

மகா சிவராத்திரி நான்கு காலமும் அபிடேகம் ஆராதனே, பஞ்சமூர்த்தி புறப்பாடு நடைபெறும்.

**பிரம்மோற்சவம் : பங்குனி மீ**

| | |
|---|---|
| முதல் நாள் | துவஜாரோகணம், சூரியபிறை. |
| இரண்டாம் நாள் | மறிவாகனம் |
| மூன்ரும் நாள் | பூதவாகனம் |
| நான்காம் நாள் | நாகவ்ாகனம் |

| | |
|---|---|
| ஐந்தாம் நாள் | தங்க மயில் வாகனம் (தேவ மயில்) |
| ஆரும் நாள் | யானை வாகனம் |
| ஏழாம் நாள் | வெள்ளி மயில் வாகனம் (ராக்ஷச மயில்) |
| எட்டாம் நாள் | திருக்கல்யாணம், வெள்ளிக் குதிரை வாகனக் கண்கோள் ளாக் காட்சி. |
| ஒன்பதாம் நாள் | இரதம் (பூரத்தில் துவக்கும்) |
| பத்தாம் நாள் | உத்திரத்தன்று தீர்த்தவாரி. |
| பதிஞெரும் நாள் | புஷ்பப் பல்லக்கு. |
| பன்னிரண்டாம் நாள் | சண்டேசுரர் உற்சவம் |

முதலியனவாகும்.

உச்சிக்காலத்து அலங்கார நைவேத்தியம் மூன்று தேசாந்திரியர்களுக்குக் கொடுக்கப்படும். அதைத் தவிர ஆறு தேசாந்திரிகளுக்கு ஆறுபட்டைச் சாதம் கொடுக் கப்படும். விசேடக் குறிப்பு :—18-ம் பட்டம் ஸ்ரீமத் சிவஞானபாலய சுவாமிகள் காலத்தில் 1940-ம் ஆண்டு மின்சார வசதி 2000 ரூபாய்ச் செலவில் செய்யப்பட் டிருக்கிறது. ஜனங்கள் குடி தண்ணீர் வசதிக்காக, ஒவ் வொன்று 1500 காலன் தண்ணீர் கொள்ளும்படியான நான்கு தொட்டிகள் கட்டப்பட்டிருக்கின்றன.

கோவிலின் மதிற்சுவர்களில் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவைகள் இத்தலத்திற்குரியனவோ வென ஐயுறவேண்டி யிருக்கின்றது.

இத்தலத்தைப்பற்றிப் பாடியவர்கள் பலருளர் ; அவர்கள் பாடிய பாக்களும் பலவாகும். அதில் அருண கிரிநாதர் பாடிய திருப்புகழ் வருமாறு :—

கொலை கொண்ட போர்விழி கோலோ வாளோ
விடமிஞ்சு பாதக வேலோ சேலோ
குழைகொண் டுலாவிய மீனோ மானோ எனுமானர்
குயில்தங்கு மாமொழி யாலே நேரே
இழைதங்கு நூலிடை யாலே மீதூர்
குளிர் கொங்கை மேருவி னாலேநான விதமாகி
உலைகொண்ட மாமெழு காயே மோகா
அலையம்பு ராசியி னூடே மூழ்கா
உடல்பஞ்ச பாதக மாயா நோயால் அழிவேனோ
உறுதண்ட பாசமொ டாரா வாரா
எனையண்டி யேநம னார்தூ தானோர்
உயிர்கொண்டு போய்விடும் நாள்நீ மீதா அருள்வாயே
அலைகொண்ட வாரிதி கோ கோ கோ கோ
எனநின்று வாய்விட வேநீள் மாசூர்
அணியஞ்ச ராசனம் வேறாய் நீறு யிடவேதான்
அவிர்கின்ற சோதிய வாரார் நீள்சீர்
அனலங்கை வேல்விடும் வீரா தீரா
அருமந்த ரூபக ஏகா வேறோர் வடிவாகி
மலைகொண்ட வேடுவர் கானூ டேபோய்
குறமங்கை யாளுட னேமா லாயே
மயல்கொண் டுலாயவள் தாள்மீ தேவீழ் குமரேசா
மதிமிஞ்சு போதக வேலா ஆளா
மகிழ்சம்பு வேதொழு பாதா நாதா
மயிலந் தண்மாமலை வாழ்வே வானோர் பெருமாளே

காஞ்சிபுரம் சிதம்பரமுனிவர் இயற்றியருளிய க்ஷேத்திரப் பிள்ளைத்தமிழில் மயிலத்து முருகனைப் பற்றிப் பாடியிருக்கிறார். அது வருமாறு :—

பொங்குந் திரைக்கடல்க ளேழுமேற்
றிவுமுயர் புகழ்பூ தரங்க ளெட்டும்
பொன்மேரு கிரியுமணி மயமாக நின்றிலகு
பூச்சக்கிர வாளகிரியு

மங்குறவ முண்டமுக டுந்தலையும் வேறுமுற
வருசூரன் மாவானநாள்
வளரனந் தங்கோடி யண்டங்கள் தனதுருவின்
வருரோம முனையினிற்க
வெங்குந்தன் வடிவென விசுவரூபங் கொண்ட
வேகநாயகன் பிரமமிங்
கிறப்பொடு பிறப்பிலா னம்பிறவி மாற்றவே
யீசனொரு மதலையானே
னங்கைகொண் டெட்டிப் பிடிக்குமுன்
முருகனுட னம்புலீ யாடவாவே
யயில்வேலன் மயிலம்வரும் மயில் வாகனத்தனுட
னம்புலீ யாடவாவே.

இன்னும் வேலைய சுவாமிகள் என்பார்கள் மயிலத் துலா இயற்றியிருக்கிறார்கள். அச்சுக்கு வரவில்லை. மயிலம் நூறுதிருப்புகழ் இருக்கிறது. செய்தவர் இன்னா ரென அறிதற்கில்லை. ஏட்டுச்சுவடியில் குகையூர் வித்வான் திரு. அடிகளாசிரியரிடம் உள்ளது. விரைவில் அச்சாகும். திருமயிலம் சந்நிதிமுறை, மணி அப்பாவை யர் முதலியோர் இயற்றிய பல பிரபந்தங்கள் உள்ளன. தற்போது முருகன் ஆலயத்துள் நிசிந்தா வேலை பார்த்து வருகிற அருட்கவி வேலாயுதம் பிள்ளையால் திருப்புகழ் முந்நூறு, மயிலவேளாற்றுப்படை முதலிய பிரபந்தங் கள் பாடப்பட்டிருக்கின்றன.

" ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்சை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க ! வாழ்கசீ ரடியா ரெல்லாம் "

